# கடவுளினருள் விசிட்டம்.

கடவுளினருள் விசிட்டம்: - அஃதாவது கடவுளுடைய அருளின் விசேடத்தைப்பற்றிக் கூறுதல். கடவுள் ஒருவர் இருக்கின்றார். அவருடைய அருள் இருக்கின்றது என்பன முதலிய தெளிவுடை வசனவிளக்கம் யாவரிடத்தும் பதிந்து நன்னிலையை அன்னோர் அடைய வேண்டும் என்ற பெருவிருப்பினாலே இவ்விடயம் எழுதி வெளிப்படுத்தப்பட்டது.

ஆரிருந்தென் னார் போயென் னாரமுதா நின்னருளின்
சீரிருந்தாலுய்வேன் சிவமே பராபரமே.

கடவுள் எப்பொழுதும் உள்ளவர். அவர் எங்கும் நிறைந்தவர் அவர் எல்லாறிடவர், ஜீவான்ம குணங்களுள்ளே ஒன்றையாவது அவாடத்திலே சாணமுடியாது. எனவே அக்கடவுள் அநாதியே பாசங்களினின்றும் நீங்கித் தத்துவாதீதராய் விளங்குவார் என்பது வெளிப்படையாகும்.

இங்ஙனமே கடவுளுடைய இலட்சணங்கள் பலவுள. இத்தகைய இலட்சணங்களோடு கூடிய அப்பரஞ் சோதிஸ்வரூபராகிய பகவான், ஆன்மாக்களின் மீது வைத்த கைம்பாறற்ற கிருபையினாலேதான் தமது அருட்சத்தியை அதிட்டித்து நின்று ஆனமாக்களுக்குத் தருகாண புவம் போகங்களைக் கொடுத்துப் புசிப்பித்து அவ்வவ் வான்மாக்களின் பக்குவம் நோக்கி அவைகளை ஆனந்தமயமாக்கியருளுவார். இப்படிக கடவுள் செய்யாதிருந்தால் ஆன்மாக்கள் ஒரு காலத்தும் நற்கதியடையமாட்டா. அப்பெருமான் செய்வனயாவும் அருளின் மிகுதியேயாகும். அவைகள்யாவும் தம் பயன் குறியாது, ஆன்மாக்களாகிய பிறர் பயன் குறித்தனவேயாம். அஃது,

உருவருள் குணங்களோடு முணர்வருளுருவிற் றோன்றுங்
கருமமு மருளரன்ற கரசரணாதி சாங்கந்
தருமருளுடாங்க மெல்லாந் தானருடனக் கொன்றின்றி
யருளுரு வுயிருக் கென்றேயாக்குவன சிந்தனன்றே.

என்ற சித்தாந்த சாஸ்திரத் திருவிருத்தத்தானே நன்குடோதரும் இவ்வாறே ஆன்பாக்களுக்கு அருள் பாலிக்கும்படி கடவுளாற் கொள்ளப்பட்ட மூர்த்தங்களும் பல, அவைகளுள்ளே விநாயக சுப்பிரமணிய வைரவ வீரபத்திர மூர்த்தங்களே விசிட்டம்பெற்றன. இவைகளைக்கொண்டு துஷ்ட நிக்கரக சிட்டபரிபாலனஞ் செய்த பரஞ்சோதியாகிய சிவமே பிரமா விஷ்ணு ருத்திரன இந்திரன் முதலிய யாவர்க்கும் மேலானவராவர். தற்காலத்திலே கடவுளென்று சிலராற் கொண்டாடப்படுவோர் இறப்பு பிறப்பு முதலிய குணங்களுடையார். ஆதலின், அவர்கள் கடவுளென்று அழைக்கப்படுந் தகுதியுடையரல்லர். முழுமுதற் கடவுளாகவுள்ளவர்

**சிவபெருமானேயாம்**. அப்பெருமான் கொண்டருளிய மூர்த்தங்கட்குச் செய்யும் வழிபாடும் அவரையே சென்றடையும்

இதுகாறுங் கூறப்பட்டவற்றானே சிவபிரானே முதற்கடவுள் என்பதும்; அவரிடத்திலே யன்றித் தற்காலத்திலே கொள்ளப்படும் நவீன கடவுளரிடத்திலே கடவுளிலட்சணமில்லை என்பதும் உணர்க. அன்றியும், கலியுகவரத காருணய ஸவரூபராகிய சுப்பிரமணியப் பெருமானை யாம பேரன்பு கொண்டு வழிபாடு செய்யுமிடத்து எமது வினைகளை யொழித்து வீடுபேறருள்வாரென்பதையுந் தெற்றெனத் தெளிர்து; சிவதீட்சை பெற்று சிவசன்ன தாரணராய் வாழ்ந்து, நற்கதியடைய யாவரும் முன்னிற்பேயாக.

வ. மு. இரத்திநேசுவர ஐயர்.

சித்தாந்தம் - 1913 ஹு - செப்டம்பர் மீ